*Kumaran̲*

*Āram 20, muttu 39*

*May 13, 1943*

Record no. 313

REGD. NO. M. 1823. | 8 பக்கங்கள். | விலை 0—2—0

சந்தா விவரம்
உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 6—0—0
ஆறு மாதம் 3—8—0
சிலோன் ரூ. 6—0—0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு
ஷ 1-க்கு ரூ. 8—0—0

# குமரன்

விளம்பரம்.
கோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலிய வைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2—0—0
வியாபார சம்பந்த மானது ரூ. 1—0—0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக் கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் | மாதம் பதிப்பும் சேர்ந்தது. | PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 20 | காரைக்குடி சுபானு-ஸூ சித்திரை-மீ 30-உ (13—5—43) | முத்து 39

(சென்றவாரத் தொடர்ச்சி)

பரதம் என்பது நாட்டியக் கலையை விவரிக்கும் ஓர் கிரந்தம். அது பரதரால் எழுதப்பட்டது. அந்தப் பரதம் என்னும் நூலில் ஸங்கீதமும் செவ்வையாய்க் கூறப்பட்டிருக்கிறது. ஏனெனில் ஆடவேண்டுமாகில் அதற்குப் பாடுவோன் வேண்டும் என்று அவர் நற்பாட்டின் லக்ஷணத்தையும் பிறகு ஆட்டத்தின் லக்ஷணங்களையும் விவரித்திருக்கிறார். பரதம் என்ற பதமே ஸங்கீதத்தை உணர்த்தும் என்றும், பாவம் ராகம் தாளம் என்ற வார்த்தைகளின் முதல் எழுத்துக்களால் அது அமைந்தது என்றும் கூறுவோருண்டு.

பரத நாட்டியம் கற்பிப்பதில் முக்கியப் பகுதிகள் மூன்று. முதற்பகுதியில் நாட்டியத்தின் தாள விவரங்கள் கற்பிக்கப்படுகின்றன. தாளங்களின் ஜதிகளை கிஞ்ஜிரா வாசிப்போன் ஓர் கையினால் வாசிப்பது போல ஆடுவோர் கால்களினால் ஜதிகளை அடித்து வரவேண்டும். இரண்டாவது பகுதியில் பற்பல உருவங்களை உணர்த்தும் அங்கவின்யாஸ பாடம் கற்பிக்கப்படுகின்றது. ஆடுவோரது இருகைகள், விரல்கள், உடலின் இதர அங்கங்கள் இவைகளைச் சேஷ்டித்தலால், அவர் நினைக்கும் சித்திரங்களை அறிவிக்க வேண்டும். இதன் பாடங்கள் கற்பிக்கப்படும். மூன்றாவது பகுதியில் தியானித்தல், சிந்தித்தல், கவலைப்படுதல், கோபம் கொள்ளுதல், ஆச்சரியப்படுதல், அவநம்பிக்கைப் படுதல், மோகங் கொள்ளுதல் முதலிய மனவேறுபாடுகளை முகக் குறிகளால் தெரிவிப்பதற்குப் பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன.

இதுபோல ஸங்கீதப் பாடமும் மூன்று பகுதிகளில் கற்பிக்கப்படுவது யுக்தமும் சாஸ்திர ஸம்மதமுமாகும். நூதன அப்பியாசிகளுக்குப் பாட்டுக்களின் தாள விவரங்களை முதலில் கற்பிக்க வேண்டும். திருப்புகழ், தேவாரம், நந்தன் சரித்திரம், ராம நாடகம், பெரியபுராணக் கீர்த்தனைகள் முதலியவற்றில் தாளஞ்ஞானத்தை உண்டுபண்ணக் கூடிய பாட்டுக்

## தென்னிந்திய இசை

தேவகோட்டை பிடில் சீனிவாசய்யர்

கள் பல இருக்கின்றன. அவற்றுள் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து அதே பாட்டுக்களை ஒருவரைப் பாடச் சொல்லி அவர் பாடி வரும்போது மாணவர்களைத் தாளம் போட்டு வரச் செய்ய வேண்டும். அவர்கள் தாளப் பாடத்தை எளிதில் கிரகித்துக் கொள்வார்கள், இது முதற்பகுதிப் பாடமாயிருக்க வேண்டும். அச் சில நாட்களில் அதே பாட்டுக்களை அவர்கள் பலதடவை கேட்டிருப்பதால் அப்பாட்டுக்களின் ராக சித்திரத்தையும் அவர்கள் ஒருவாறு கவனித்திருப்பார்கள்.

இரண்டாவதுபகுதியில்அப்பாட்டுக்களின் ராக சித்திரங்களை இன்னும் அதிகமாக அவர்கள் ஊன்றிக் கவனிக்க வேண்டுமென்று பாடங்கள் கற்பிக்கப்பட வேண்டும். வீணை அல்லது பிடில் வாத்தியத்தில் ஒருவர் அப்பாட்டுக்களை வாசித்தால் மாணவர்கள் இன்ன இன்ன பாட்டுக்கள் என்று கண்டு பிடிக்கிறார்களா என்பதை உபாத்தியாயர் கண்டறிய வேண்டும். பின்பு அவர்கள் ஒவ்வோர் பாட்டின் ஒவ்வோர் சிறு பாகத்தையும் பார்த்து இன்ன பாட்டில் வருவது என்று அறியும் ஆற்றலுள்ளவராயிருக்கிறார்களா? என்பது உபாத்தியாயரால் கவனிக்கப்பட வேண்டும். பிறகு சித்திரங்களில் பலவகைகள் உண்டு என்றும் இவ்விவை இன்ன இன்ன ராகத்திற் சேர்ந்தது என்றும் உபாத்தியாயர் மாணவருக்குக் கற்பிக்க வேண்டும். இது ஸங்கீதத்தின் சித்திரப்பகுதியாகும். மூன்றாவது பகுதியின் தேர்ச்சி உண்மையில் மிகச் சிறந்தது. ஏனெனில் முதற்பகுதி ஸங்கீத புருஷனின் கால் நடையைத் தெரிவித்தது. இரண்டாவது பகுதி அவனுடைய அங்கங்களின் சித்திர அழகுகளைத் தெரிவித்தது. மூன்றாவது பகுதி ஸங்கீத புருஷனின் யோக்கியதை, சக்தி, குணம் முதலிய விவரங்களைத் தெரிவிக்கின்றது. இப்பகுதி சிறந்ததன்றோ?

ஸங்கீதக் கிரந்தங்களில் முதலில் ஸங்கீதம் என்றால் கீதம் வாத்யம் நிருத்யம் இம்மூன்றும் சேர்ந்தது என்று நன்றாய் எழுதப்பட்டிருக்கிறது. கீதஞ்ஞானம் வாத்யஞ்ஞானம் நிருத்யஞ்ஞானம் இம்மூன்றையும் ஸங்கீதம் கற்போன் அடைய வேண்டுமாம். அவன் தாள ஜதிகளின் விவரமான படிப்பையும் ராகங்களின் விவரமான படிப்பையும் வெவ்வேறு ராகங்களின் வெவ்வேறு வகைகளான அழகு அமைதிகளையும் அவற்றின் விவரத்தையும் தெரிந்து கொள்ள வேண்டும். இவ்விரண்டு பகுதிகளையும் தெரிந்து கொண்டாலே ஒருவன் ஸங்கீதத்தை அறிந்தவனும் நன்கு மதிக்கப்படுவான். அதாவது வெவ்வேறு பாட்டுகளில் வரும் தாள ஜதிகளின் அழகுகளையும் ராக நுட்பங்களின் அழகுகளையும் தெரிந்து கொண்டு பாடிவரும்போது அவன் பாட்டு நன்கு மதிக்கப்படும் என்பதில் சந்தேகமில்லை. இந்த அளவில் அடையப்பட்ட ஸங்கீதத் தேர்ச்சியில் அவன் ஸங்கீத புருஷனின் ஸங்கீத உடலைப்பற்றி மட்டுமே தெரிந்து கொண்டவனாவான். ஸங்கீத புருஷனின் உயிர் ஸம்பந்தமான அறிவின் தேர்ச்சி இதினும் மிகச் சிறந்ததாகும்.

உயிர் என்பது யாவராலும் உணரக் கூடுமாகிலும் எப்படி எடுத்துக்கூற இயலாததோ அப்படியே இத்தேர்ச்சியின் விவரமும் எடுத்துக் கூறக் கடினமானது. அதனைச் சில உதாரணங்களால் விளக்குவோம். (1) "யாருக்குத் தான் தெரியும் அவர் மகிமை" என்று ஒருவர் பாடிவரும் பொழுது அதன் தாள அழகையும் ராக அழகையும் நாம் தனித்தனியே கவனிக்கக்கூடும். இவ்விரண்டையும் கவனிப்பதற்கு வேண்டிய ஸங்கீதஞ்ஞானத்தை அடைந்திராத மற்றவர்களும் அப்பாட்டின் பொருளைக் கவனிக்கக்கூடுமன்றோ? அவர் அம்பலத்தில் ஆடினார். தேவர்கள் அவரைக் கொண்டாடினார்கள் என்ற விவரங்களை விவரிக்கும்போது கேட்போர் அப்பாட்டின் அர்த்தத்தில் மெய்மறந்து நிற்பார்களன்றோ? (2) "ஆண்டவனே உனை நம்பினேன், அடி

(2-ம் பக்கம் பக்கம் பார்க்க)

## தென்னிந்திய இசை

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

மைக்கு அடிமை'' என்ருல் அந்தப் பாட்டின் தாள அழகையும் ராக அழகையும் கவனியாதவரும் அதன் அர்த்தத்தில் ஈடுபடுவார்களன்ருே? அவர்களின் மனம் நெகிழ்ச்சியை அடையாதா? (3) "கண்டேன் அவர் திருப்பாதம்—கண்டேன் அவர் திருப்பாதம்—கண்டறியாதன கண்டேன்" என்று பாடுவதைக் கேட்டால் எல்லோரும் பரவசமடைய மாட்டார்களா? (4) "எங்குற்ருயெனத் தேடுகின்றேன்."(5) "மனமே தினமேனும் நீ மறவேன்''—இம்மாதிரி எண்ணிறந்தபாட்டுக்களை உதாரணமாக எடுத்துக் காட்டலாம். தெலுங்குக் கீர்த்தனைகளை ஒருவர் பாடும்போது அப்பாஷை தெரியாத தமிழர்கள் கேட்டால் இம்மூன்ரும் பகுதியின் உணர்ச்சி உண்டாகுமா?

சில தமிழ்ப் பாட்டுகளில் அவற்றின் எழுத்துக்களை வாசிக்கும்போதே ஓர் ஆனந்தம் அடையப்படுகின்றது. சிலவற்றில் தாள அமைப்பிஞல் அவற்றிற்கு நன்மதிப்பு உண்டாகின்றது. இன்னும் சிலவற்றில் ராகச்சுவை சிறந்து விளங்கிக் கொண்டிருப்பது குறிக்கப்படும். ஆகவே ஓர் நல்ல பாட்டை விலை உயர்ந்த ரத்னத்திற்கு ஒப்பிடுவோமாகில் எப்படி அந்த ரத்னமானது தக்க கட்டிட அமைப்பினுல் இன்னும் அதிக விலை மதிப்பை அடையப் பெறுகின்றதோ அப்படியே ராக தாள அமைப்பாகிய கட்டிடத்தினுல் ஓர் நற் பாட்டும் விசேஷ மதிப்பை அடைகின்றது என்னலாம்.

ஒருவர் பாடி வரும்போது கேட்போர் அப்பாட்டின் அர்த்தத்தைக் கவனிக்க முடியாதாகில் அவர் கேட்கும் பாட்டிற்கு ரத்னமில்லாத ஓர் கட்டிடத்தையும் உயிரில்லாத உடலையுமே உவமையாய்க் கூறுவது பொருந்தும். ராக தாள அமைப்பு எவ்வளவு சிறந்ததாயிருந்த போதிலும் அவ் அமைப்பு எதன் பொருட்டு ஏற்பட்டது என்பதை முதலில் கவனிக்கவேண்டு மன்ருே? ரத்னமில்லாமல் ஓர் கட்டிடம் செய்யவேண்டுமென்ருல் கட்டிட ஆசாரி அதைச் செய்வதற்கு ஒப்புக்கொள்வாரா?

மற்ற வர்க்கங்களைவிட மனித வர்க்கத்திற்கு சிறந்த குணம் பேசுந் தன்மை என்பதைச் சுலபமாய் அறியலாம். வித்யாப்பியாசத்திற்கு நமக்கு அப்பேசுந் தன்மையே இன்றியமையாத சாதனமாயிருக்கின்றது. வித்தைகளுள் சங்கீதம் மிக முதன்மையானது. ஸங்கீத வித்தையில் பேசும் பாஷையை அலட்சியம் செய்துவிட்டதனுலுண்டான குறைகள் ஒன்று இரண்டல்ல. குற்றங்கள் எண்ணிறந்தவையாயிருக்கின்றன. முதலிலிருந்து கடைசி வரையில் குற்றம்தான் என்று ஒருவர் சொல்லுவதால் பயன் என்ன? முதற் பகுதி இரண்டாம் பகுதி மூன்ரும் பகுதி ஆகிய மூன்று பகுதிகளின் பாடங்களும் சரியன்று என்பதை மிகத் வெளிவாயும் விவரமாயும் எடுத்துக்கூறலாம். குறைகளைச் சொல்வதைக் குறித்துக்கொண்டு அக்குறைகளை நிவர்த்திப்பதற்கு "ஸத்யப்பல"னை மார்க்கம் கூறவேண்டு மென்பதே எனது நோக்கம்.

"கலைவளர்ச்சி நோக்கமுள்ள உபாத்தியாயர்கள் ஒன்று சேரவேண்டும். இருட்டைப் போக்குவதற்குத் தக்க பிரகாசமான வெளிச்சம் போடவேண்டும். மூடியிருக்கும் கண்களைத் திறந்து கொள்ளவேண்டும். சங்கீதப் பாடங்கள் மிருதங்கப்பாடம், வீணைப்பாடம், பிடில்ப்பாடம், வாய்ப்பாட்டின் பாடம், லக்ஷிய பாடம், லக்ஷணபாடம் முதலிய — யாவற்றிலுமுள்ள குற்றங்களை யெல்லாம் உபாத்தியாயர்கள் தமக்குள் நன்ருய்க் கலந்து கொள்ளவேண்டும். அதற்கு இது நல்ல ஸமயம் என்று தோன்றுகின்றது.

—

### தேவி கிளப், நேமத்தான்பட்டி

டி கிளப்பின் முதலாவது, வருஷக் கொண்டாட்டம், சுபானுஸு சித்திரைமீ 18உ திருவாளர் அரு. அ. அண்ணுமலை செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம், தலைவரவர்களால் நூல் நிலையம் ஒன்று திறந்துவைக்கப் பெற்று, தேனீர் விருந்துடன் விழா இனிது நிறைவேறியது.





### காகிதத்தை வீணுக்கக் கூடாது

திருவனந்தபுரம் சர்க்கார் எச்சரிக்கை

ஸ்டேஷனரி சாமான்களையும் அச்சிட்ட காகித பாரங்களையும் வீணுக்கக் கூடாதென்று சர்க்கார் மீண்டும் அதிகாரிகளுக்கு எச்சரிக்கை செய்திருக்கிருர்கள். எவ்வளவோ தடவை சொல்லியும் அதிகாரிகளிடையே நடக்கும் கடிதப் போக்கு வரத்துக்குக் கூட உயர்தர காகிதங்களும், கவர்களும் உபயோகிக்கப் படுவதாகவும் இனிமேல் அம்மாதிரி செய்தால் கடுமையான நடவடிக்கை எடுக்கப்படு மென்றும் சர்க்கார் எச்சரித்திருக்கின்றனர்.

—

### மிகவும் வேகமாய்ச் செல்லும் விமானம்

பர்லினைப் பட்டப்பகலில் தாக்கிய பிரிட்டிஷ் விமானம் ஒன்று பிரிட்டனிலிருந்து ரஷ்யாவுக்கு நிற்காமல் பறந்து சென்றிருக்கிறது. காலையில் பறந்து சென்று மாலையில் திரும்பி வந்தது. இது உலகத்திலேயே மிகவும் வேகமாய்ச் செல்லக் கூடிய விமானம்.

—

### நெல், அரிசி ஏற்றுமதி

சிவில் சப்ளை கமிஷனரின் புதிய உத்தரவு

தென்ஆற்காடு, தஞ்சை, திருச்சி ஜில்லாக்களிலிருந்து நெல், அரிசி ஆகியவற்றை வெளியிடங்கட்கு ஏற்றுமதி செய்ய அந்தந்த ஜில்லா அதிகாரிகள் அனுமதி கொடுக்கவேண்டுமென்று சிவில் சப்ளை கமிஷனர் முன்பு உத்தரவிட்டிருந்தார். இப்பொழுது இதை மாற்றி தஞ்சையிலுள்ள உணவுப்பொருள் வாங்கும் உத்யோகஸ்தரே அனுமதி கொடுக்கலாமென்று உத்தரவிட்டிருக்கிருர்.

—

### ராமனுதபுரம் ஜில்லா போர்டு

கல்வி வரியில் உயர்வு

மே 5உ மதுரையில் நடைபெற்ற ராமனுதபுரம் ஜில்லா போர்டு கூட்டத்தில் கல்வி வரியை 5 பைசாவிலிருந்து 7½ பைசவாக உயர்த்தவும் ஆரம்பப் பாடசாலை ஆசிரியர்களுக்கு பஞ்சப்படி கொடுக்கப் பொது நிதியிலிருந்து கல்வி நிதிக்கு ரூ 20000 கொடுக்கவும் தீர்மானிக்கப் பெற்றது.





### வேவலுக்கு வைஸ்ராய் பதவி?

அவருக்கு சுலபமான வேலை வேண்டுமோம்

இந்திய வைஸ்ராய் பதவிக்குப் பலரது பெயர்கள் பிரஸ்தாபிக்கப்பட்டு வருகின்றன. இப்போது இந்திய சேனுதிபதி ஸர் வேவல் பெயரும் பிரஸ்தாபத்துக்கு வந்திருக்கின்றது. அவருக்கு இப்போது தான் 60 வயது முடிந்தது. பிரிட்டிஷ் சர்க்கார் சம்பிரதாயப்படி அவர் இனி விலக வேண்டும்.

சென்ற வருஷம் இதே காரணத்துக்காகத் தான் ஸர் ஜான்டில் விலகினர். ஜெனரல் வேவல் மத்திய கிழ்த்திசை பிரதேசத்தில் சேனுதிபத்யம் ஏற்ற பின் ஓய்வின்றி உழைத்திருக்கிருர். மலேயா ஜாவா இந்தியா ஆகிய விடங்களில் ஜப்பானியர் படையெடுப்பைத் தடுக்க அவர் அரும்பாடு பட்டிருக்கிருர். ஆகவே இப்போது அவர் சற்று சுலபமான வேலையை வரவேற்பதில் ஆச்சரியம் எதுவுமில்லை.

—

### அரியக்குடி

ஸ்ரீ திருவேங்கட முடையானுக்கு பிர்மோற்சவம் சித்திரை 28-ந் தேதி முதல் வைகாசி 9உ ஞாயிறு முடிய 13 நாள் நடைபெறும். சித்திரை 31உ தங்கக் கருட வாகனம், வைகாசி 4உ தங்கக் குதிரை வாகனம், 5உ ரதோற்சவம், 8உ தெப்பம். உற்சவத்தில் பந்தநல்லூர் ரத்னம் பிள்ளையின் மேளக்கச்சேரியுடன் சங்கீதக் கச்சேரிகளும் நடைபெறும்.



### தண்ணீருக்குள் பாலம்

ரஷ்ய எஞ்ஜினீயர்கள் வேலை

ரெஷெவுக்கு அருகில் ரஷ்ய என்ஜினீயர்கள் கட்டிய. ஒரு பாலத்தைப்பற்றி சமீபத்தில் பாராட்டுச் செய்திகள் பல வந்தன. அந்த வாராவதி நிர்மாணத்தைப் பற்றிய விவரங்கள் இப்பொழுது கிடைத்திருக்கின்றன.

ரெஷெவுக்கு அருகிலுள்ள ஒரு நதிக்குப் பாலம் போட வேண்டியது அவசியமாயிற்று. எதிர்க்கரையில் ஜெர்மானியர் அதி ஜாக்கிரதையாகக் காவல் புரிந்து கொண்டிருந்தனர். ஆகவே, ஜெர்மானியர் கண்ணுக்குப்படாத ஒரு இடத்தில் ஜலத்திற்குள் வாராவதி யொன்றைக் கட்டுவதென ரஷ்யர்கள் தீர்மானித்தனர்.

இந்த வேலையைச் செய்து முடிக்க ஸொஸ்கோல்கின் என்ற என்ஜினியர் ஒப்புக்கொண்டார். முதலில் பெரிய பாராங் கற்களில் பலமான தூண்களை அமைத்தார். பிறகு துருப்புகளை விட்டு அவற்றை நதியில் பல விடங்களில் இருத்தினர். ரஷ்யத் துருப்புகள் இந்த வேலையில் ஈடுபட்டிருக்கையில் பல கஷ்டங்கள் அவர்களுக்கு உண்டாயின. இடையில் ஐஸ் கட்டிகள் மிதந்து வந்து தாக்கும், ஒரு சமயம் ஜெர்மானியரோ ஏதோ நடக்கிறதென்ற சந்தேகத்தின் மேல் நடு ஆற்றில் சுட்டு பல ரஷ்ய 'ஸாப்பர்களை'க் கொன்று விட்டனர். இத்தனைக்கும் ரஷ்யர் அஞ்சாது தங்கள் வேலையைச் செய்தனர்.

கருங் கற்களில் அமைக்கப்பட்ட தூண்கள் நதியில் இறக்கப்பட்ட பிறகு, மேல் வேலை ஆரம்பமாயிற்று. அந்தத் தூண்கள் இரும்புக் கிராதிகளால் இணைக்கப்பட்டு பாலம் பூர்த்தி செய்யப்பட்டது. இப்படி நீருக்குள் நிர்மாணிக்கப்பட்ட பாலத்தின் மீது ரஷ்யத்துருப்புகள் எதிர்க் கரையை அடைந்தன.

### பூதேடங்கில் யானையுடன் போர்

எதிரியென பீரங்கிப் பிரயோகம்

பூதேடங்—மவுங்டா ரோட்டை ஜப்பானியர் துண்டிப்பதற்கு முன்பு அரக்கான் முனையிலிருந்து குகை வழியில் யானை யொன்று வந்து போராடிய செய்தி யொன்று கிடைத்திருக்கிறது.

ஓரிருண்ட இரவில் குகையை காத்துக் கொண்டிருந்த இந்திய சிப்பாய்கள் பூதேடங் ரோடு குகை வழியின் எதிர்ப்பக்கத்தில் ஒரு பெரிய உருவம் நடந்து வருவதாகேற்படும் சத்தத்தைக் கேட்டனர். உடனே ஒரு சிப்பாய் யாரெனக் கேட்டு பதில் வராததால் துப்பாக்கியால் சுட்டான். ஆனுல் யானை அந்த சிப்பாயைத் தன் துதிக்கையால் தூக்கித் தரையில் மோதியது.

எதிரி தாக்குவதாக நினைத்து மற்றொரு சிப்பாய் பிரன் பீரங்கி பிரயோகம் செய்ய அப்பீரங்கியைத் தூக்கி யானை அவன் தலையிலடித்தது. அதன் மீது நமது துருப்புகள் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய யானை பின்வாங்கி காட்டில் மறைந்தது.

—

### ஹைதராபாத் வெள்ளி நாணயங்கள்

ஆறுகோடி ரூபாய் குறைந்துவிட்டது

வெள்ளி நாணயங்களைச் சேமித்து வைத்துக் கொண்டதாலும் உருக்கி வெள்ளியாக்கி விட்டதாலும் வெளியிடங்களுக்கு அவற்றை அனுப்பிவிட்டதாலும் ஹைதராபாத்தில் சுமார் 6 கோடி ரூபாய்க்கு மேல் புழக்கத்திலில்லாமல் மறைந்து விட்டது. உடனே இதற்குப் பதில் நாணயமடிக்க ஹைதராபாத் தங்கசாலையில் முடியவில்லை, ஆகவே கான்வி கோட்டுகளைச் சர்க்கார் போட்டிருக்கிருர்கள்.

### பிரிட்டன் அமெரிக்காவை வெள்ளி கேட்கிறது

இந்திய சப்ளை வற்றிவிட்டது

இரவல்—குத்தகை திட்டத்தின்கீழ் அமெரிக்காவிலிருந்து வெள்ளி அனுப்ப வேண்டுமென்று பிரிட்டன் கேட்டிருப்பதை செனெட் வெள்ளிக் கமிட்டி ஆலோசித்து வருவதாக டைம்ஸ் பத்திரிகையின் நிருபர் எழுதுகிருர். பிரிட்டனின் இந்தக் கோரிக்கையின் பூர்வீக கதையை இரவல்—குத்தகை நிர்வாகி, மி. ஸ்டெட்டினியஸ் கமிட்டிக்கு எடுத்துக் கூறினர். பிரிட்டனிடம் இப்பொழுது கையிருப்பிலுள்ள வெள்ளி ஜூன் மாதம் முதல் தேதிக்குள் காலியாகிவிடும் என்று அவர் கூறினர். 1943-ம் வருஷத்தின் முதல் பாதியில் 50 லட்சம் அவுன்ஸ் வெள்ளி பிரிட்டனுக்குத் தேவையாயிருக்கும். இதில் மூன்றிலொருபாகம் தொழிலில் உபயோகிப்பதற்கும், மீதம் உள்நாட்டு, வெளிநாட்டு நாணயச் செலாவணிக்கும், ஏராளமான அமெரிக்க துருப்புகளின் உபயோகத்துக்கான நாணயச் செலாவணிக்கும் தேவையாயிருக்கும். அமெரிக்க கஜானுவில் இருக்கும் முடக்கப்படாத கையிருப்பிலிருந்து இதில் இன்னமும் 50 கோடி அவுன்ஸ் வெள்ளி கையிருப்பிலிருப்பதாக மி. ஸ்டெட்டினியஸ் கூறுகிருர். அமெரிக்க வெள்ளி அனுப்பப்படும்.

இது போக, பிரிட்டனுக்குத் தேவையாயிருக்கும் பாக்கி வெள்ளியை, பரஸ்பர ஒத்தாசை ஏற்பாட்டின் கீழ் கனடா அனுப்புமென்று ஏற்கனவே அறிவிக்கப்பட்டிருக்கிறது. இந்தியாவிலிருந்து முன்பு கிடைத்துக்கொண்டிருந்த வெள்ளி இப்பொழுது வற்றிவிட்டது; மெக்ஸிகோவிலிருந்து கிடைப்பதற்கான மார்க்கங்களும் ஆராயப்பட்டுக் கைவிடப்பட்டன; மற்றவிடங்களிலிருந்து கிடைப்பது மிகச் சொற்பமே. இதனுல்தான் இந்தப் புதிய யோசனைகள் இரவல்—குத்தகையில் வெள்ளி வந்து சேர்ந்தவுடன் தொழில்களின் தேவைக்கான வெள்ளியை விநியோகிப்பதற்கு விசேஷ ஏற்பாடுகள் செய்யப்படுமென்று நம்பலாம்.









### காளையார்கோவில்

இவ்வூரில் பிர்மோற்சவம் சித். 27உ முதல் வைகாசி 5உ வரை நடைபெறும். வைகாசி 2உ பொய்ப்பிள்ளை மெய்ப் பிள்ளையாகுதல், உருத்திர சாபம் நீக்கல், 4உ ஸ்வாமி அம்மன் மகா ரதம், 5உ தெப்போற்சவம், சப்தாவரணம், வைகாசி 2உ முதல் இறுதி வரை திருவீழிமிழலை சுப்பிரமணியம் பிரதர்ஸ் மேளக்கச்சேரியும் சதுர், சங்கீதக் கச்சேரிகளும் நடைபெறும்.

—

### முனிஸிபல் சிப்பந்திகள் சங்கம்

காரைக்குடி முனிஸிபல் சிப்பந்திகளின் சங்கக் கூட்டம் 7-5-43ல் கூடியது. டை சங்கத்துக்கு முனிஸிபல் கமிஷனர் தலைவராகவும் சுகாதார அதிகாரி உபதலைவராகவும் திரு கே. வி. நடராஜன் காரியதரிசியாகவும் திரு டி. ஷொாம பிள்ளை பொக்கிஷதாராகவும் நிர்வாகக் கமிட்டிக்கு மேற்கொண்டு ஐந்து அங்கத்தினர்களும் நியமிக்கப் பெற்ருர்கள்.

# கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களுக்கு

## நாட்டுக்கோட்டை நகரத்தார் உபசாரம்

## ஆத்தங்குடியில் வைபவம்

### செட்டிநாடு ராஜா அவர்களின் சொற்பொழிவு

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையவர்களும் டீ. கே. ஸி. அவர்களும் மே 11உ செவ்வாய்க்கிழமை காலை வண்டியில் தேவகோட்டை ரஸ்தா ஸ்டேஷனில் வந்திறங்கினர்கள். அன்பர் பலர் மலர் மாலையிட்டு வரவேற்று மகளிர் இல்லத்துக்கு அழைத்துச் சென்றனர். பழைய புதிய நண்பர் பலரையும் கவிமணி அவர்கள் அளவளாவினர்கள். அடுத்த நாள் புதனன்று காலையில் மகளிர் இல்லத்தில் அரசு வேம்புக் கன்றுகளை நட்டுப் பயிரிட்டார்கள். பின்னர் ஆத்தங்குடிக்குச் சென்று அங்கே திரு. பெ. மு. சுப்பையா செட்டியாரவர்கள் இல்லத்தில் பகல் விருந்து நடைபெற்றது. மாலை 4-மணிக்கு ஆத்தங்குடி நா. அரு. ஹாலில் நகரத்தாரின் பாராட்டு நடைபெற்றது. வெளியூர்களிலிருந்தும் உள்ளூரிலிருந்து ஆண்களும்பெண்களுமாக ஏராளமானவர் விஜயம் செய்திருந்தனர். ஹால் நிறையவும் பால்கனி நிறையவும் வெளியிலும் கூட்டம் நிறைந்திருந்தது. ஸ்ரீ லோகநாயகி கலைமகள் வித்தியாசாலை மாணவிகள் கடவுள் வாழ்த்துப்பாட நிகழ்ச்சிகள் ஆரம்பமாயின. நகரத்தார் சார்பாக ராஜா சர் அண்ணாமலைச் செட்டியாரவர்கள் கவிமணி அவர்களை வரவேற்றுப் பேசியதாவது:—

“இன்று இங்கு நடைபெறும் இந்த விழாவில் நானும் கலந்து கொள்ள வேண்டுமென்று விரும்பியழைத்த ஸ்ரீமான் கி. நாராயணன் செட்டியார் அவர்களுக்கும் மற்ற நண்பர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றி செலுத்துகிறேன்.

எல்லோருக்கும் அவரவர்களுடைய தாய் நாடு, தாய் மொழியில் பற்று இருப்பது இயற்கையேயாகும். அவைகளின் முன்னேற்றத்தைக் கருதி ஒவ்வொருவரும் தன்னால் இயன்ற அளவுக்குத் தொண்டாற்றி வருவது அவசியம். உலகத்தில், உயர்வானதும் பழமையானதுமான மொழிகளில் நமது தாய்மொழியும் ஒன்று. நம் முன்னோர்கள் இம்மொழியில் மிகச் சிறந்த இலக்கிய இலக்கண நூல்களை இயற்றியிருக்கின்றார்கள். அவைகளெல்லாம் நமக்கு அழியாச் செல்வமாகும்.

நமது தமிழ்நாட்டில் தோன்றிய புலவர்கள் பலர் எண்ணிறந்த நூல்களை இயற்றித் தந்ததன் பயனாக நமது தாய்மொழி மேலும் மேலும் சிறப்புற்றுச் செழித்து வளரலாயிற்று. தாய்மொழியைப் போற்றுவதுபோலவே நமது நாட்டுப்பெரும் புலவர்களையும் போற்றிப் பாராட்டுவது நம்முடைய கடமையாகும். நமது நாட்டில் பிறந்து வளர்ந்து, நம்மில் ஒருவராகவிருந்து, நமது மொழியைச் சிறப்புறச் செய்தநல்ல புலவர்களைப் பாராட்டுவதால் நாம் நம்மையும் நமது மொழியையும் பெருமைப்படுத்திக்கொள்ளுகின்றோம்.

தமிழரின் துர்ப்பாக்கியம் காரணமாக, சிறிது காலமாக நம் தமிழ் மொழியும் தமிழ் இசையும் தமிழரிலேயே ஒரு சிலரால் புறக்கணிக்கப்பட்டதோடு, அவைகள் பிரகாசிப்பதற்குத் தமிழர்கள் செய்யும் முயற்சியையும் எதிர்த்துப் பொருத்தமில்லாத காரணங்களையும் சொல்லுகிறார்கள். அந்த விவாதத்தைப்பற்றிப் பேசுவதற்கு இது சரியான சந்தர்ப்பமல்ல. இயற்கைக்கு மாறான எந்தக் காரியமும் நீண்டநாள் நிற்காதென்பதற்குச் சான்றாகத் தமிழ் மொழிக்கும் தமிழ் இசைக்கும் ஏற்பட்ட எதிர்ப்பு ஒவ்வொரு நாளும் குறைந்து வருகிறதென்று சொன்னால் அது மிகையாகாது. நமது தாய் மொழியின் வளர்ச்சியில் மக்களுக்கு இப்பொழுது வரவர விளக்கம் அதிகரித்து வருவது நன்றாக விளங்குகின்றது. நமது செட்டிமார் நாட்டில் இவ்வூக்கம் பேச்சளவில் நின்றுவிடாமல் செய்கையிலும் சிறந்து விளங்குவது மிகுந்த பெருமையையும் மகிழ்ச்சியையும் தருவதாகும். தமிழ் நாட்டின் இப்பகுதியில் பல ஊர்களில் பல தமிழ்ச் சங்கங்கள் தோன்றித் தாய்மொழித் தொண்டாற்றி வருவதை நாம் அறிவோம். இவ்விதமாகத் தொண்டு புரிவதில் தமிழ்ப் புலவர்களைப் பாராட்டிப் போற்றுவதும் ஒரு முறையாகும். புலவர்களைப் போற்றுவதால் அவர்களுடைய விளக்கமும் உத்ஸாகமும் அதிகமாகி இன்னும் பல சிறந்த நூல்களை அவர்கள் இயற்றித் தமிழ்மொழிக்கும், தமிழ் மக்களுக்கும் உதவி புரிய முன் வருவார்கள்.



கவிமணி
தேசிகவிநாயகம் பிள்ளை

தமிழ் மொழியையும், தமிழ்ப் புலவர்களையும் ஆதரித்துப் போற்றவேண்டுமென்ற உயர்ந்த நோக்கத்துடன் இது போன்ற விழாக்களை நடத்த முன் வந்திருப்பவர்களில் நமது நகரத்தார் முன்னணியில் இருப்பது மகிழ்ச்சியைத் தருகிறது. சமயப் பற்றும் மொழிப் பற்றும் இயற்கையிலேயே வாய்க்கப் பெற்ற நகரத்தார் இவ்வித விழாக்கள் மூலமாகத் தமிழ்த் தொண்டு புரிவதனால் சிறந்த பலன்கள் உண்டாகுமென்பதில் சந்தேகமில்லை. தனவணிகச் செல்வர்களிலேயே சிலர் தமிழில் சிறந்த புலவராக இருப்பது நமக்குப் பெருமை தருவதாகும். அவர்களுடைய விளக்கத்தினாலும் ஒத்துழைப்பினாலும் தமிழ் மொழி மேன்மேலும் செழித்தோங்கிச் சிறப்படையு மென்று நாம் தாராளமாக நம்பலாம்.

இன்று நாம் கூடியிருப்பது கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளை அவர்களைப் பாராட்டுவதற்காகும். ஸ்ரீமான் பிள்ளையவர்கள் நமது காலத்தவர்; நம்மில் ஒருவர்; தமிழகத்தில் நாஞ்சில் நாட்டில் பிறந்து வளர்ந்தவர்கள். ஆங்கில மொழியிலும் தமிழ் மொழியிலும் தேர்ச்சி பெற்றவர்கள்; திருவனந்தபுரத்தில் மஹாராஜா அவர்களின் பெண்கள் கலாசாலையில் தலைமைத் தமிழ் ஆசிரியராக இருந்து, தமிழ் மொழி ஓங்கத் தொண்டாற்றிப் புகழும் பெருமையும் பெற்றவர்கள். கல்வெட்டுகளை ஆராய்ந்து சரித்திர ஆராய்ச்சி செய்வதிலும் சிறந்த கட்டுரைகள் எழுதுவதிலும் வல்லவர்கள். எல்லோர் மனத்தையுங் கவரத்தக்க கவிகள் பல இயற்றித் தமிழ்த் தொண்டு புரிவதில் சிறந்து விளங்குகின்றவர்கள். ஸ்ரீமான் பிள்ளை அவர்கள் இயற்றியுள்ள பாடல்களெல்லாம் உயர்ந்த கருத்துக்கள் உடையனவாய் எளிய இனிய நடையில் இருப்பதால், தமிழ் மக்கள் தாய்மொழியில் புத்துணர்ச்சி பெற்றுக் கலை வளர்ச்சியில் புதிய ஆர்வங்கொண்டுள்ள இக்காலத்தில் அவைகள் மிகவும் பிரபலம் அடைந்து விளங்குகின்றன. “மலரும் மாலையும்” என்ற புத்தகம் இக்கவிஞருடைய பெருமைக்குச் சிறந்த சான்றாகும்.

பொதுவாக ஒரு புலவரை அவரது வாழ்நாட்களிலேயே போற்றிப் பாராட்டுவது மிகவும் அரிது. கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் நமது காலத்தவராகவும், தமிழ் மொழி மறுமலர்ச்சி பெற்று விளங்கும் முறையில் கவிகள் இயற்றித் தமிழ் மக்கள் மனத்தைக் கவரும் புலவராகவும் இருப்பதை நகரத்தார் அறிந்து அவர்களை தக்க முறையில் பாராட்டி வாழ்த்த முன் வந்திருப்பது மிகவும் போற்றத்தக்கதாகும்.

இதுபோன்ற விழாக்களினால் விளையும் நன்மை குறிப்பிடத்தக்கது. பொது மக்களின் அன்பும் ஆதரவும் காரணமாகப் பாராட்டப் பெறும் புலவர்கள் மேன்மேலும் நாட்டிற்குத் தாங்கள் தொண்டாற்ற அதிகமான ஊக்கத்துடனும் உறுதியுடனும் முன்வருவார்கள். தாய்மொழியில் மக்களுக்குள்ள அபிமானத்தையும், இசை வளர்ச்சி, கலை வளர்ச்சி முதலியவற்றில் அவர்களுக்குள்ள ஆர்வத்தையும் இது போன்ற விழாக்கள் நன்றாக விளக்கிக் காட்டும்.

இன்று நாம் போற்றிப் பாராட்டும் ஸ்ரீமான் பிள்ளை அவர்களுக்குத் தமிழ் நாடு மிகவும் கடமைப்பட்டிருக்கின்றது. தற்காலத்தில் தமிழர் விரும்பும் நடையில் சிறந்த பாடல்கள் இயற்றித் தமிழ் இலக்கியத்திற்கும், இசைக்கும் அரும்பணி புரிந்தவரும் இவர்கள் இனிவரும் இளம் புலவர்களுக்கு நல்ல உதாரணமாக விளங்குவார்கள் என்பதில் சந்தேகமில்லை. இக்கவிஞர் ஏறக்குறைய எழுபது வயது உள்ளவர்களாயினும் தமிழ் மொழிப்பற்றிலும் தொண்டிலும் சிறிதும் தளர்ச்சியின்றி இளைஞருக்குரிய ஊக்கத்துடனும் உத்ஸாகத்துடனும் உழைத்து வருகின்றார்கள். இப்பெரும் புலவருடைய பாராட்டுக்கூட்ட வைபவத்தில் நானும் கலந்துகொண்டிருப்பதனால் எனக்குண்டாகியிருக்கும் சந்தோஷத்திற்கு அளவேயில்லை. இவர்கள் வாக்கிலிருந்து இன்னும் பலபல சிறந்த பாடல்கள் உண்டாகித் தமிழ் மக்களுக்குத் தாய்மொழிப் பற்றை உண்டுபண்ணவும், தொன்றுதொட்டுப் பெருமை வாய்ந்துள்ள நமது தமிழ் இலக்கியம் இன்னும் வளம்பெறவும் ஸ்ரீமான் பிள்ளையவர்கள் அரோக திடகாத்திரத்துடன் நீடூழி வாழ்ந்து தமது தாய்மொழிப் பணியைப் புரிந்து வரவேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திப்போம்”

என்று கூறி மிக வேலைப்பாடமைந்த பொன்னுடை-பீதாம்பரத்தை கவிமணி அவர்களுக்கு மிகுந்த குதூகலத்துக் கிடையே போர்த்தினர்கள். சேர்த்தியாக சித்திர வேலை செய்யப்பெற்று உபசார மொழிகள் பொறித்து எங்கிரேவ் செய்த வெள்ளியில் தங்கம் பொதித்த பிளேட்டை ராஜா சர் அவர்கள் கவிமணிக்கு அளித்து மாலையணிவித்தார்கள்.

பின்னர் ரசிகமணி திரு. டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள் நீண்ட கரகோஷத்துக் கிடையே எழுந்து பேசியதாவது:—

ஒரு அறிஞர் 2000 வருஷங்கட்கு முன் ஒரு உண்மையைக் கண்டுபிடித்து நமக்குச் சொன்னர். அது என்ன? 1000 வருஷத்துக் கொருமுறை ஒரு உண்மைக் கவி பிறப்பான். இது முற்றிலும் உண்மை. தமிழர்கள் பாக்கியசாலிகள். எத்தனையோ கவிகள் பிறந்து பண்படுத்தியதன் காரணமாக இப்போது ஒரு கவி பிறந்திருக்கிறார். அருமையான கவி. நமது கவிமணி அவர்கள் பாராட்டிப் போற்றப்பட வேண்டியவர். நமது கவிமணியின் பாடல்களைப் பள்ளிக்கூடங்களில் சிறு குழந்தைகள் நன்கு பாடிவருகிறார்கள். மேற்படி பாடல்கள் குழந்தைகளின் மூலம் நம் உள்ளத்தை இளகச் செய்கிறது. எத்தனையோ பாடல்களைப் பாடியிருக்கிறார்கள். அவரும் குழந்தை மாதிரிதான். 68 வயதுக் குழந்தை (சிரிப்பு) அவர் உள்ளம் குழந்தை உள்ளம் தான். சான்று வேண்டுமோ? பொம்மைக்கும் பொம்மைக்கும் கல்யாணம். அருமையான பாடல். குதிரை புலம்பல். இது ஒரு பாடல். குதிரையின் இதயத்தில் புகுந்து குதிரையாக மாறிக் கண்ணீர் விடுகிறார். புத்தர் சரித்திரம். இது மிக அருமையான பாடல். ஆங்கிலத்திலு மிருக்கிறது. இருந்தாலும் அது நம் உள்ளத்தைக் கவரவில்லை. இவர் பாடியிருப்பது நம் இதயத்தைக் கொள்ளைகொள்ளுகிறது. சிதம்பரம் நடராஜமூர்த்தி தில்லையில் ஆனந்த நடனம் செய்கிறார். அது ஒரு பாட்டு.

தில்லைப் பதியுடையான் சிற்றம் பலந்தன்னில்
அல்லும் பகலும் நின்று ஆடுகிறான் - எல்லைக்கண்
அன்னை மலைமகள் அமைத்த கலைக்கழகம்
கண்ணாரக் கண்டு களித்து.

ஒரு போக்கு; ஒரு தாளம்; ஒரு கும்மாளம், நமது ராஜா சர் அவர்கள் 30, 40 லட்சம் செலவழித்து அருமையான கலைக் கழகத்தை ஸ்தாபித்திருக்கிறார்கள். இது தமிழுக்கா? கிரீக்குக்கா? அல்லது வேறு பாஷைக்கா? எல்லாம் தமிழுக்குத்தான். நகரத்தார்கள் தமிழ் பக்தி, தெய்வ பக்தி ரொம்ப வாய்ந்தவர்கள். இங்கு மட்டுமல்ல, கடல் கடந்து சென்றாலும் அங்கும் கூட இம்மாதிரி கோயில், கோபுரம், திருப்பணி செய்திருக்கிறார்கள். அவர்களுடைய மனத்தின் பண்பாட்டைக் காண்பிக்கிறது. தமிழ் நாட்டில் பிறந்ததினால் இந்த பண்பாடு. ஈடு பாடு; ஒரு தன்மை. நமது கவிமணியைப் பாராட்ட இவர்களே உரியவர்கள். தாயார் குழந்தையை பாராட்டுவது மாதிரி, இவ்வாறு பெரிய அலங்கார மண்டபத்தில் தேவேந்திர போகமாக ஆத்தங்குடியில் ஒரு கவி பாராட்டப்படும்பொழுது நமது உள்ளம் கும்மாளம் போடுகிறது. இவ்விதம் நகரத்தார் உபசாரம் செய்ததற்கு நாம் ரொம்ப நன்றி செலுத்தவேண்டும். 68வயது சிறு பிராயம் தான். இன்னும் 20 வருஷம் கழித்து இதே மண்டபத்தில் நமது கவிக்கு சதாபிஷேகமும் செய்து பார்க்கவேண்டும். அப்படி ஒரு சந்தர்ப்பம் ஏற்பட இறைவன் அருளவேண்டும்.

அதன் பின்னர் திரு. பிச்சப்பா சுப்பிரமணியம் அவர்கள் கவிஞரைப் பாராட்டிப் பேசியதாவது:- நாம் வெகு காலமாக இந்த பாராட்டுக் கூட்டத்தை எதிர்பார்த்தோம்; இப்பொழுது இவ்வளவு வெற்றிகரமாக இந்தக் கொண்டாட்டம் நடந்தது எல்லோருக்கும் ரொம்ப மகிழ்ச்சி. இவ்வருஷ கம்பர் விழாவிலே நடக்கவேண்டியிருந்தது. ஆனால் சில மாறுதல்களினால் நடக்கவியலாது போயிற்று. இப்பொழுது இவ்வளவு சிறப்பாக நடந்தது உண்மையிலேயே நான் பெரு மகிழ்ச்சி யடைகிறேன். பாரதியார் ஒரு சிறந்த கவி. நம் காலத்தவர். நாங்கள் அவரை வரவேற்றுப் பாராட்டினோம். 26 வருஷங்கட்கு முன்னே காரைக்குடிக்கு வந்திருந்தார். நானும், சொ. முருகப்பா, ராய. சொக்கலிங்கம் முதலிய நண்பர்கள் பாரதியாரைப் பாராட்டினோம். அனுபவித்தோம். திரு. கி. நாராயணன் செட்டியார் அப்பொழுது பாரதியாருக்கு ஒரு தைத்த சட்டையைக் கொடுத்தார். அவருடன் இருப்பது எங்கட்கு உற்சாகமாயிருந்தது. ‘பாண்டியா’ என்றுதான் அவர் எல்லோரையும் அழைப்பது வழக்கம். எல்லோரும் இந்நாட்டு மன்னர்கள் என்று சொல்பவரல்லவா? அவர் ஒரு பெரிய வேதாந்தி. அவருடைய பாடல்களைக் கேட்டு நாங்கள் ஒரு விழிப்பை யடைந்தோம், வீரங் கொண்டோம். அவர் மாதிரி இன்னொருவர் பாடமுடியாது. எங்கட்காக (ஹிந்து மதாபிமான சங்கம்) அருமையானப் பாட்டுக்களைப் பாடினர். நமது கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களைப் பாராட்ட வேண்டுமென்று எண்ணினோம். இன்று நடைபெற்றுவிட்டது. அவர் வரும் பொழுதே இயற்கை அன்னையையும் அழைத்துவந்து விட்டார். நேற்று அமராவதிபுதூர் மகளிர் இல்லத்துக்கு வந்தது முதல் இதுவரை மழையாகவே இருக்கிறது. வெப்பம் இல்லை. எல்லோருக்கும் ரொம்ப சந்தோஷமாக இருக்கிறது. கவிகளுக்கு பீதாம்பரம் போர்த்துவது நமது சம்பிரதாயம். நமது கவி அவர்கள் பாட்டு அவ்வளவும் கற்கண்டுதான். எதைச் சொல்வது எதைச் சொல்லாமலிருப்பது? புத்தர் பாட்டு, கிளிப்பாட்டு. ஏன்! பாரதியாரைப் பற்றியே நமது கவிஞர் பாடியிருக்கிறார். அவ்வளவும் அருமையான பாடல்கள். இப்பொழுது சிறிது காலமாகத் தமிழிசை விவாதம் நடந்து வருகிறதே. ரொம்ப நாளைக்கு முன்னாலே நமது கவி இசைக்குத் தமிழ் தான் மிகப் பொருத்தம் என்று கூறிவிட்டார். எப்படி! “பாலுக்குச் சீனியைப்போல்—தமிழ்ப் பாடலுக் கின்னிசைபோல்” பால் முக்கியமா? சீனி முக்கியமா? என்று நீங்கள் தான் முடிவு செய்யவேண்டும். விளக்கெண்ணெயில் சீனி போட்டு சாப்பிட்டால் எப்படியிருக்கும்? பார்த்துக்கொள்ளுங்கள். அர்த்தமில்லாத வாதம். நமது கவி அவர்கள் சிறந்த புகழுடன் நீடூழி காலம் வாழவேண்டும். நாமெல்லாரும் அவரது பாடல்களை நன்கு அனுபவிக்கவேண்டும்.

அதன் பின்னர் “குமரன்” ஆசிரியர் சொ. முருகப்பா அவர்கள் பேசியதாவது:— இதைத் தொடர்ந்து ஆண்டுவிழா நிகழ்ச்சி வேறு நடக்கவிருக்கிறது. நான் அதிகமாக ஒன்றும் சொல்லவேண்டுவதில்லை. எனக்கு



முன் பேசினவர்கள் பேசின தெல்லாம் ஒரு மச்சந்தான். பூராத் தங்கத்தையும் உரைத்துப் பார்க்க முடியாது. ஏராளமான பாட்டுகள் இருக்கின்றன. கவியின் ஜீவிய காலத்திலேயே பாராட்டும்படியான பாக்கியம் ஏற்பட்டதற்கு நாம் பெருமையடையவேண்டும். கம்பர் ஒரு அருமையான கவி. ஆனால் அவரை நாம் நேரில் பார்த்ததில்லை. பாரதியார் இருந்தார்; கஷ்டப்பட்டார். பிறகு சுகமாகப் போய்ச் சேர்ந்தார். எவ்வளவோ பேர் அருமையாகப் பாடியிருக்கலாம். பிள்ளைக்குப் பாட்டெங்கே? “குழலினிது,யாழினிது என்பர்; என்று சொல்லலாம். அது பெற்றோருக்கு! குழந்தைக்கு ஏற்ற பாட்டு எங்கேயிருக்கிறது?” தோட்டத்திலே மாடு மேய்கிறது கன்றுக்குட்டி துள்ளிக் குதிக்கிறது” இதில் என்ன ரசமிருக்கிறது? ஆனால் அது “தோட்டத்தில் மேயுது வெள்ளைப் பசு— அங்கே, துள்ளிக்குதிக்குது கன்றுக்குட்டி” என்று கவியின் உள்ளத்திலிருந்து வரும்பொழுது உள்ளபடியே துள்ளத்தான் செய்கிறது. நமது கவிமணியை சுமார் 20 வருஷங்கட்கு முன்னால் அறிய சந்தர்ப்பம் ஏற்பட்டது. “பாடியவாய் தேனூறும்” -பாரதியார் என்று ஒரு கட்டுரையில் ஒருவர் எழுதியிருந்தார். இந்தத் தொடர், கவியாகவல்லவா இருக்கிறதென்று விசாரித்தேன். தேசிகவிநாயகம்பிள்ளையின் பாட்டு என்று தெரிந்தது. அவருக்கு எழுதினோம். பாட்டுவந்தது. 18 வருஷத்து முன் “குமரனில்” இது வெளிவந்தது. பாரதியாரை எவ்வளவு ரசித்து அனுபவித்திருக்கிறார்! அநேக அபூர்வமான பாடல்களை நமது கவி பாடியிருக்கிறார். “இளந்தென்றல்” 4 வயதுக் குழந்தை 30 பாட்டுக்களைப் பாடுகிறது.

இவ்வளவு பெரிய நகரத்தார்கள் கூடி உள்ளம் களிகூர்ந்து பாராட்டுவது போற்றத்தக்கதுதான். மூவேந்தர் இருந்து செய்த திருப்பணியை இன்று நகரத்தார்கள்தான் செய்து வருகிறார்கள். கவிகளைப் போற்றுவதும் ஒரு திருப்பணி. இதில் நாம் பெருமைப்படவேண்டியதுதான். மிக வெற்றிகரமாக இக்கூட்டம் நடந்திருக்கிறது. ஆனால் கவிக்கு இதில் விருப்ப மிருக்காது என்று தோன்றுகிறது. மனதிலே ஒரு நடுக்கம் என்று கூட நான் சொல்வேன். நமது கவி அவர்கள் மிக எளிமையான வாழ்க்கையை நடத்துபவர்கள். நான் அவர் வீட்டுக்குப் போயிருக்கிறேன். காரில் போனோம். பிறகு நடந்து போனோம். பிறகு ஒவ்வொருவராகப் போனோம். அவ்வளவு சிறிய சந்துப்பாதை. வீட்டில் பார்த்தோம். படாடோபம் கிடையாது. எளிய உள்ளம். ஏராளமாகக் ‘குமரனில்’ வெளிவந்த பாடல்களை யெல்லாம் திரட்டி புஸ்தகமாகப் போடலாமா என்று கேட்டேன். வேண்டாம். யார் படிக்கப்போகிறார்கள். நஷ்டம் வரும் என்று எழுதினர்கள். பிறர்க்கு நஷ்டம் ஏற்படக்கூடாது என்ற உண்மையான கருத்தைக்கொண்டு எழுதினர்கள். நம்ம பேர் போட்டு புஸ்தகம் வெளியிடுங்கள் என்று சொல்லுபவர்களு மிருக்கத்தான் செய்கிறார்கள். அவ்வித எண்ணமெல்லாம் நமது கவிக்கு இல்லை. மிக எளிமை. ஜீவகாருண்யப் பிரசாரம் கொஞ்ச நாள் நடத்தினேன் ஆடு கோழி வெட்டக் கூடாதென்று. இப்பொழுது பிரசாரம் இல்லையே ஒழிய கொள்கை அது தான். அப்பொழுது புத்தர் பேரில் பாட்டு பாட வேண்டுமென்று கேட்டேன். (Light of Asia) என்ற ஆங்கிலப் புத்தகத்தை அனுப்பினேன். தமிழில் மிக அருமையாகப் பாடி யனுப்பினர்கள். குமரனில் வெளிவந்து சுமார் 17 ஆண்டுகள் ஆகின்றன. எதுகை மோனை முதலியவற்றைப் போட்டு எழுத்தோடு எழுத்தை இணைத்துக் கட்டிப் பிராணனையே கட்டிவிடுகிறார்கள் சிலர். அவைகளில் பாவ உணர்ச்சி ஏற்படாது;மெய்ப்பாடு வராது. இந்த பாராட்டுக் கூட்டத்தில் நமது ராஜா சர் அவர்கள் நகரத்தார் பிரதிநிதியாக வந்து பாராட்டினது நமக்கெல்லாம் ஒரு சிறந்த பாக்கியம்.

பின்னர் கவிமணி எழுந்து பேசியதாவது:- இனிய தமிழ், இசைத் தமிழ், எவருக்கும் ஆசைதரும் தமிழைப் போற்றி வரும் நகரத்தாரவர்களே! பெண்மணிகளே! முதலில் எனது மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறேன். ஒரு யானைக்கு அணிவிக்க வேண்டிய பொன்னுடையை ஒரு ஆட்டுக்குட்டிக்கு அணிவித்தார்கள் நமது ராஜா சர். இந்த ஆட்டுக்குட்டி இதைத் தாங்குமா என்று நீங்களே யோசியுங்கள். ஆனால் ராஜா அவர்

## ஸ்ரீ லோகநாயகி கலைமகள் வித்தியாசாலை ஆண்டு விழா

### கவிமணி தலைமையில் நடைபெற்றது

ஆத்தங்குடி ஸ்ரீ லோகநாயகி கலைமகள் வித்யாசாலையின் 14வது வருடக் கொண்டாட்டம் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் தலைமையில் 12-5-43 புதன்கிழமை மாலை 6 மணிக்கு நா. அரு. ஹாலில் நடைபெற்றது. மாணவிகள் கடவுள் வாழ்த்துப்பாட விழா ஆரம்பமாயிற்று. திரு. சி. ராம. நா. கா. இராமநாதன் செட்டியாரவர்கள் விழாவை நடத்தித் தரும்படி கவிமணியைக் கேட்டுக் கொண்டார். திரு. அழ. அருணாசலம் செட்டியாரவர்கள் தலைவருக்கு வந்தனோபசாரப் பத்திரத்தை வாசித்தளித்தார். திரு. பெ. மு. லெட்சுமணன் செட்டியாரவர்கள் சங்கத்தின் அறிக்கையைப் படித்தார். பிறகு மாணவ மாணவிகளின் நடிப்பு,கும்மி, கோலாட்டம் முதலிய பல காட்சிகள் நடைபெற்றன. கம்பரில் ஒரு காட்சி நடிக்கப்பட்டதில் பரதனாக நடித்த சுப. சிதம்பரம் என்னும் சிறுவன், உண்மையாகவே தேம்பித் தேம்பி அழுது விட்டான். அவன் கண்ணீர் விட்டதமல்லாமல், சபையோரையும் உள்ளமுருகும்படிசெய்துவிட்டான். எல்லாச் சிறுவர்களும் உணர்ச்சிதரும்படி நடித்தார்கள். பின்னர் ரசிகமணி டி. கே. சி. அவர்கள் பேசுகையில் பள்ளிக்கூடங்களில் தமக்கு நம்பிக்கையில்லை என்றும் அதிலும் சர்க்காரிடம் கிராண்டு வாங்கும் பள்ளிக்கூடங்களில் நம்பிக்கை அறவே போய்விட்டதென்றும் மிக நன்றாக எடுத்துச் சொன்னர். ஆனால் கிராண்டு வாங்காத சில பள்ளிக்கூடங்கள் செட்டிமார் நாட்டில் மிக நன்றாய் நடத்தப்பட்டு வருகிறதென்றும் பிறபகுதிகளில்இவ்விதப்பள்ளிக்கூடங்களைப்பார்ப்பது அரிதென்றும்லோகநாயகி கலைமகள்வித்தியாசாலை மிக நன்றாய் நடத்தப்பட்டு வருகிறது என்பதற்குச் சான்று பரதன் நடித்ததே போதுமென்றும் கூறினர். மேலும் பரதனை நடித்த பையன் சோகரச நடிப்பில், தான் உண்மையாகவே ஈடுபட்டு விட்டானென்றும் எதிர்காலத்தில் இப்பையன் ஒரு சிறந்த நடிகனாக வருவான் என்றும் சொன்னர். திருவாளர்கள் பெ. மு. சுப்பையா செட்டியார், ராம. அழ. அழகப்ப செட்டியார், சி. ராம. நா. கா. இராமநாதன் செட்டியார் ஆகிய மூவரும் சேர்ந்து இவ்வளவு சிறப்பான பள்ளிக்கூடத்தை நடத்தி வருவதைப்பற்றி மிகவும் பாராட்டிக் கூறினர்.

பின்னர் தலைவரவர்கள் முடிவுரையின் சாராம்சமாவது:- பெரியோர்களே! இப்பள்ளிக்கூடமானது 3 பிரபுக்களால் நடத்தப்பட்டு வருகிறது. இந்த மூவரும் சேர்ந்து அருமையான தொண்டைச் செய்து வருகிறார்களென்றால் இதன் பெருமையைச் சொல்லவும் வேண்டுமோ! டி. கே. ஸி. பேசின பிறகு வேறொருவரும் பேசமுடியாது. பேசினாலும் ரஸிக்காது. கிராண்ட் வாங்காமல் நடத்துவதுதான் நல்லது. கிராண்ட் வாங்கினால் அதிகாரிகளுக்கு உட்பட்டு அவர்கள் திட்டப்படிதான் சொல்லித்தரவேண்டும். அது மட்டுமல்ல. தினம் ஒரு சர்க்குலர் வரும், அதைப் படித்துப் பார்ப்பதற்கும் ரிட்டன் அனுப்புவதற்கும் தான் வேலை சரியாயிருக்கும். இன்ஸ்பெக்டர்களும் குற்றங்களைக் காணவே வருகிறார்கள். அதில் ஒரு ரீதி அவர்களுக்கு ஏற்படுகிறது. ஆசிரியர்களைத் திருத்துவதில்லை, எங்கும் இப்படித்தானிருக்கிறது. இது நீங்களே நடத்தும் பள்ளிக்கூடம். அந்தக் கஷ்டங்களெல்லாம் உங்களுக்கு கிடையா, காது குளிர, உள்ளங்குளிர, கண்குளிர சிறுவர்கள் நடிப்பைக் கண்டீர்கள். டி. கே. ஸி யே பாராட்டுவதென்றால் சாமான்யமன்று. பெரிய நடிகரிடத்திலேயும் குறை காண்பார். பரதனை நடித்த பையனிடம் வயப்பட்டு சர்டிபிகேட் கொடுத்துவிட்டார். உண்மையாகவே, அவன் நன்றாக நடித்தான். ராமாயணத்திலே குகப்படலம் என்பது நடுநாயகம்.படிப்பவர்கள், கண்ணீர் வடிக்கத்தான் செய்வார்கள். அக்னி பகவானையே படிக்கச் சொன்னாலும் வருண பகவானாக மாறிவிடுவார். பள்ளிக்கூடம் நடத்துவது வாத்தியார் பொறுப்புமட்டுமல்ல. பெற்றோர்களும் அவ்வப்பொழுது கவனித்து வரவேண்டும். ஆசிரியர்களும் பையன்களுக்கு விளங்காத பாடங்களைச் சொல்லித் தரக்கூடாது. இப்படிப்பட்ட சமயத்தில் என்னைத் தலைமை வகிக்கக் கேட்டுக்கொண்டதற்கு நான் நன்றி செலுத்துகிறேன். இப்பள்ளிக்கூடமும் அதன் மானேஜர்களும் நீடூழி வாழப் பிரார்த்திக்கிறேன்.

பின்னர் கவிமணி அவர்களுக்கு ஆத்தங்குடி லோகமாதா திரிசாரணர் படையார்களால் ஒரு உபசாரப் பத்திரமும் வெள்ளிக் கப்பும் சாசரும் அளிக்கப்பெற்றன. ஆத்தங்குடி நேரு வித்தியாசாலையார், கோனாபட்டு இளைஞர் ஒற்றுமைக் கழகத்தார், ராமச்சந்திரபுரம் அன்புநிலையத்தார், வேந்தன்பட்டி இளைஞர் ஒற்றுமைக் கழகத்தார் முதலியவர்கள் கவிஞருக்கு உபசாரப் பத்திரம் வாசித்தளித்தார்கள். பின்னர், நகரத்தார் பாராட்டுக் கூட்டமும் வித்யாசாலை ஆண்டுவிழாவும் நன்கு நடைபெற வேண்டுமென்று வாழ்த்தி வந்த பல கடிதங்கள் வாசிக்கப்பெற்றன. திரு அழ. அருணாசலம் செட்டியாரவர்கள் வந்தனம் கூற விழா முடிந்தது. இரவில் திரு. சி. ராம. நா. கா. இராமநாதன் செட்டியாரவர்கள் வீட்டில் யாவருக்கும் உணவு அளிக்கப்பட்டது. 12 மணிக்குப் பழைய மாணவர்களால் ராஜசேகரன் என்னும் நாடகம் நடத்திக் காண்பிக்கப் பெற்றது.

விழா முடிந்ததும் இரவு பெ. மு. வீட்டிலேயே தங்கியிருந்து இன்று (வியாழனன்று) காலை சுமார் 10-மணிக்கு நேமத்தான்பட்டி திருநாவுக்கரசு வித்யாசாலைக்குச் சென்று பார்த்துவிட்டுக் கானாடுகாத்தானுக்கு வந்து சேர்ந்தனர். பகல் செட்டிநாட்டு ராஜா அவர்களின் விருந்துண்டனர். மாலை பள்ளத்தூர் முத்தப்பா நூல் நிலையம் இலக்கியப்பண்ணை ஆகியவற்றின் உபசாரம் நடைபெற்றது. ஏராளமானவர் விஜயம் செய்திருந்தனர். வெள்ளித் தாம்பாளமும் உபசாரப் பத்திரமும் வழங்கப்பட்டன. டி. கே. ஸி. அவர்களும், சொ. முருகப்பா அவர்களும் பேசினர். இரவு க. வெ. ராம. வீட்டில் விருந்து நடைபெற்றது. அங்கே தங்கியிருக்கிறார்கள். நாளைக் காரைக்குடி உபசாரங்கள் நடைபெற இருக்கின்றன. சனிக்கிழமை முற்பகல் இந்தோ-சிலோன் எக்ஸ்பிரஸில் (தேவகோட்டை ரஸ்தா ஸ்டேஷனில்) ஊருக்குத் திரும்புகிறார்கள்.

### காரைக்குடியில் விளக்கணைப்பு நீக்கல்

மே 11உ முதல் இங்கே இருந்த விளக்கணைப்பு ஏற்பாடு ரத்து செய்யப்பட்டது. ஒரு கம்பம் விட்டு ஒரு கம்பத்திலுள்ள கூடுகள் வைத்துக்கொள்ளப்படும். நீலரச விளக்குகளும் எரியவிடப்படும். வீடு வண்டி வாகனம் கட்டியிருந்த இது சம்பந்தமான கட்டுப்பாடுகளும் நீக்கப்பட்டன.



## நகரத்தார் உபசாரம்

(முதல் பத்தி தொடர்ச்சி)

கள் யானை என்று நினைத்து எனக்கு இந்த பீதாம்பரத்தை அணிந்திருப்பதனால் யானையின் பலம் இந்த ஆட்டுக்குட்டிக்கு ஏற்படுமல்லவா? நான் 4, 5 வருஷம் எக்ஸிமா என்ற நோயினால் ரொம்பக் கஷ்டப்பட்டேன். அதற்காக ஆங்கிலேய வைத்தியம் அஷ்டாங்கயோகம் முதலிய முறைகளில் எல்லாம் பார்த்துவிட்டேன். நோய் தீர்ந்தபாடில்லை. முடிவில் ஒருவர் திருச்செந்தூர் முருகன் மீது பாடினால் நோய் தீருமென்று சொன்னர். அவ்விதமே முருகன் மீது பாட்டுப் பாடினேன். நோயும் நீங்கிவிட்ட தென்னலாம். என் இந்தக் கஷ்டம், எனக்கும் வயது ஆகிவிட்டது, நமது திருவடி நிழலில் சேர்த்துக் கொள்ள வேண்டியதுதானே. அவ்விதம் செய்யாமல் என்னை ஏன் காப்பாற்றினர்? யோசித்துப் பார்த்தேன். ஒன்றும் புலப்படவில்லை, ஆனால் இன்றுதான் புலப்பட்டது. “நகரத்தார் மகா சந்நிதானத்திலே நமது ராஜா அவர்கள் உனக்குப் பெருமை செய்ய வேண்டியிருக்கிறது. கவலைப்படாதே” என்று என்னை அந்நோயினின்றும் காப்பாற்றியிருக்கிறார் என்று இப்பொழுது நினைக்கிறேன். ஆயுதங்களினால் உலகத்தை வெல்லலாம் என்று சில சண்டாளர்கள் நினைக்கிறார்கள். அது தவறு. அன்பினால் யாவற்றையும் வெல்லலாம். இப்பொழுது என்னை உங்கள் அன்பினால் விலைக்கே வாங்கிவிட்டீர்கள். ஏதோ நான் பித்தன் போல் பாடிய பாட்டுக்களை மெருகு கொடுத்து, அழகு செய்து டி. கே. ஸி. அவர்கள் உங்களை ரசிக்கச் செய்கிறார். அவர் யாரையும் எளிதில் மயக்க வல்லார். மனத்தையும் தம்மிடம் இழுத்துக்கொள்வார்.

பிச்சப்பா அவர்களை நேரில் தெரியாது. பத்திரிகைகளில் அடிக்கடி பார்த்திருக்கிறேன். இன்று நேரில் கண்டேன். தமிழுக்கு நல்ல தொண்டைச் செய்து வருகிறார். ரொம்பசந்தோஷம். முருகப்பா தான் எனக்கு முதலில் பழக்கம் ஆனவர். என் வீட்டுக்கும் முதன் முதலில் வந்தவர் அவர்தான். நேற்று வந்தவுடன் முதன்முதலில் போனதும் அவரது மகளிர் இல்லத்துக்குத்தான். “ஆசிய ஜோதி”யைத் தமிழில் பாடும்படி சொன்னதும் அவர்தான். நான் அவரை ஒருநாளும் மறக்க முடியாது. நீங்கள் இவ்விதம் பெருமைப் படுத்தினதற்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன். நீங்கள் எல்லோரும் நீடூழி காலம் வாழவேண்டும் என்பதே என் பிரார்த்தனை. பொன்னுடையைப்பற்றி கல்கி ஹாஸ்யமாக எழுதியிருக்கிறார். நூல் விலை அதிகமாக இருக்கும் இக்காலத்தில் பொன்னுடைப் போர்த்தி கவியைத் தண்டிக்கலாமா? என்று எழுதியிருக்கிறார்.” நூல் விலை அதிகத்துக்குப் பொன் என்றால் காகித விலை அதிகப்பட்டதற்காக வெள்ளித் தாம்பாளம்! பஞ்சம் மேற்பட்டால் தனவணிகர்களுக்கு நூல் பொன்னாகவும், தாள் வெள்ளியாகவும் மாறிவிடும். அதிகமாகப் பேசமுடியவில்லை. தனவணிகர் குலம் அதிக புகழுடன் வாழவேண்டும். ராஜா சர் அவர்கள் தன்னந்தனியாக சர்வகலாசாலை நடத்துவதில் நம்மெல்லோருக்கும் பெருமை உண்டு. இந்த பஞ்சகாலத்தில் செந்தமிழை வளர்ப்பதற்காக குமரன் காரியாலயம், சக்தி காரியாலயம், நவயுகப் பிரசுராலயம், புதுமைப் பதிப்பகம் முதலிய ஸ்தாபனங்களை நடத்தி வருவது அவர்கள் தமிழுக்குச் செய்யும் சிறந்த தொண்டல்லவா? நகரத்தார்கள் எந்நாளும் வாழவேண்டும்.

பின்னர் காரைக்குடி கி. நாராயணன் செட்டியாரவர்கள் மிக விரிவாக நகரத்தார் சார்பாக யாவருக்கும் வந்தனம் கூற பாராட்டுக் கூட்டம் இனிது முடிந்தது.

### செவ்வாய் உற்சவம்

ஸ்ரீகொப்புடையம்பாளுக்கு சித்திரை 29உ காப்புக்கட்டி திருவிழா நடந்து வருகிறது. 10 நாளும் அம்பாள் திருவுலா வருகையில் கோயில்பட்டி சங்கரபாண்டியன் பிள்ளை பிரதர்ஸ் மேளக்கச்சேரி நடைபெறும். 7, 9, 10 திருவிழாக்களில் திருவாவடுதுறை டி. என். ராஜரத்தினத்தின் ஸ்பெஷல் மேளக்கச்சேரியும் நடைபெறும்.

## சென்னைக்கு ஸ்டாண்டர்டு துணி

### கைத்தறி நெசவாளருக்கு உதவி புரிய ஏற்பாடு

இந்திய சர்க்காரின் ஸ்டாண்டர்ட் துணித்திட்டத்தில் சென்னை சர்க்காரும் கலந்து கொள்வதென்று முடிவு செய்திருக்கின்றனர்.

சென்னை மாகாணத்தில் ஜவுளி உற்பத்தி மிகக் குறைவாகவும் தேவை மிக அதிகமாகவும் இருப்பதால் சர்க்கார் மேற்கூறியவாறு முடிவு செய்திருக்கின்றனர். ஒவ்வொருவருக்கும் 17 கஜம் துணி தேவையாக இருக்கும்போது சுமார் 9 கஜந்தான் இருக்கிறது. இந்த நிலைமையில் சென்னை சர்க்கார் அகில இந்திய ஸ்டாண்டர்ட் துணித் திட்டத்தில் சேராமல் இருந்துவிட்டால் மாகாண ஜனங்களுக்குப் போதிய துணி கிடைக்காமல் போய்விடும். ஆயினும் சென்னை மாகாணத்திற்கு ஸ்டாண்டர்ட் துணி வருவதனால் கைத்தறி நெசவாளர் நிலைமை எவ்விதம் ஆகிறது என்பதையும் சர்க்கார் கவனித்து வந்து அதற்கேற்ற முறையில் தங்களது கொள்கையையும் மாற்றிக் கொள்வார்களென்று கூறப்படுகிறது. ஏனெனில் 1941ம் வருஷத்தில் கைத்தறி நெசவாளர் நிலைமை மிகவும் மோசமாகி சர்க்கார் உதவி செய்யும்படி நேரிட்டது. அதுபோல் மீண்டும் ஒரு சந்தர்ப்பம் ஏற்படக் கூடாதென்று சர்க்கார் விரும்புகின்றனர்.

ஏப்ரல், மே, ஜூன் ஆகிய மூன்று மாதங்களில் உற்பத்தியாகும் ஸ்டாண்டர்ட் துணியில் சென்னை மாகாணத்திற்கு எவ்வளவு கஜம் துணி கிடைக்குமென்பது இன்னும் தெரியவில்லை. இது சம்பந்தமான விவரம் இந்திய சர்க்காரிடமிருந்து எதிர்பார்க்கப்படுகிறது. ஸ்டாண்டர்ட் துணியின் விலையானது இதற்காக மத்திய சர்க்காரால் ஏற்படுத்தப்பட்டுள்ள கமிட்டியாலும் மத்திய சர்க்காராலும் கலந்து முடிவு செய்யப்படும். ஸ்டான்டர்ட் துணியின் விநியோகம் சம்பந்தமாகச் சர்க்காருக்கு ஆலோசனை கூற சென்னை சர்க்கார் மாகாணக் கமிட்டி யொன்றையும் நியமிப்பார்கள்.

கோயமுத்தூர் ஆலைகளிலிருந்து சமீபத்தில் சர்க்கார் பெற்ற நூலைக் கொண்டு சர்க்கார் ஆதிக்கத்திலுள்ள தறிகளில் துணி நெய்யப்பட்டு வருகிறது. மேற்படி நூல் குறைந்த விலைக்குப் பெறப்பட்டிருப்பதால் பிரஸ்தாபத் தறிகளில் நெய்யப்படும் துணியும் தற்போது மார்க்கெட்டுகளில் விற்கப்பட்டு வரும் துணியைக் காட்டிலும் மிகக் குறைந்த விலைக்குக் கிடைக்குமென்று தெரிகிறது. இந்தத் துணி இன்னும் ஒரு மாதத்தில் பொது ஜனங்களுக்குக் கிடைக்கு மென்று எதிர் பார்க்கப்படுகிறது.

## பிரசங்கம் முடிந்ததும் மூர்ச்சையானார் பிறகு இறந்தார்

### இலங்கை ராஜாங்க சபை மெம்பரின் பரிதாப முடிவு

இலங்கை ராஜாங்க சபை மன்னார் தொகுதி மெம்பர் ஸ்ரீ ஆர். எஸ். பத்மநாதன் இன்று காலை ஜெனரல் ஆஸ்பத்திரியில் இறந்து போனார். நேற்று மாலை இலங்கை சர்வகலாசாலைக் கூட்டத்தில் பேசி முடிந்ததும் இவர் மூர்ச்சையாகி விழுந்து உடனே ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்பட்டார்.

## 5000 டன் சரக்குக் கப்பல் மூழ்கிற்று

### தென்ஆப்ரிக்காவைச் சேர்ந்ததாம்

தென் ஆப்ரிக்க சர்க்காருக்குச் சொந்தமான 5 ஆயிரம் டன் சரக்குக் கப்பலொன்று தென் ஆப்ரிக்க கடற்கரையில் ஒரு அச்சு சப்மரீனால் டார்பீடோ செய்யப்பட்டு மூழ்கடிக்கப்பட்டது. கப்பல் அதிகாரி கைதியாக்கப்பட்டார். 3 நாட்களுக்குப் பிறகு அக்கப்பலிலிருந்த 46 பேர்களை அமெரிக்க வியாபாரக் கப்பல் ஒன்று கண்டெடுத்து தென் ஆப்ரிக்க துறைமுகம் ஒன்றுக்கு கொண்டு வந்து சேர்த்தது என்று அதிகாரிகள் கூறுகின்றனர்.

ஒரு ... வதால்







## யுத்த முடிவில் சுதந்திரம் நிச்சயம்

### ஸ்ரீ சர்க்கார் பிரசங்கம்

சந்திர நாகூரில் மே 7உ நடைபெற்ற பிரபார்த்தக் சங்க வருட விழாவில் பேசுகையில் ஸ்ரீ நளின ரஞ்சன சர்க்கார் குறிப்பிட்டதாவது:—

"தாங்கள் விரும்பும் சுதந்திரத்தைத் தங்கள் போராட்டத்தால், முயற்சியால் இந்தியர் இன்னும் பெறவிடினும், சந்தர்ப்பங்களின் நெருக்கடியாலும், நேச தேசங்களின் முயற்சியாலும், யுத்த முடிவில் இந்தியாவும் சுதந்திரம் பெறும். தாங்கள் இழந்த சுதந்திரத்தை நேசதேசங்களின் வெற்றிமூலம் பெற எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் போலந்து பிரான்ஸ் ஹாலந்து போல இந்தியாவும் எதிர்பார்க்க நியாயமுண்டு.

பிரிட்டனும் அமெரிக்காவும் ஜனநாயக ஆட்சி நிறுவ உறுதி கொண்டுள்ளன. அடிமை தேசங்களுக்கு விடுதலையளிக்கத் தீர்மானித்துள்ளன. உலக ஜனத் தொகையில் பாதிக்கு மேல்பட்டு அடிமைத்தளையால் பிணிபட்டிருக்கும் மக்களை விடுதலை செய்யாத ஜனநாயகக் கொள்கை போலியேயாகும்.

இந்தியத் துருப்புகள் எகிப்து, டுனீஷியா, பர்மாவில் விசேஷ தீரத்துடன் போராடி வருகின்றன. அவர்கள் வெற்றி அச்சுநாட்டினர் மீது அடைந்த வெற்றியே தவிர, தொடர்ந்தே அடிமையாயிருப்பதற்கு கிரேட் பிரிட்டனின் வெற்றியாயின் மிகவும் கேவலமானது. இந்த யுத்தத்தில் கிரேட்பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா சாதித்ததிலும், அரை நாகரிக தேசங்களான ரஷ்யாவும், சீனாவும் அதிகம் சாதித்துள்ளன. இவ்விரு நாடுகளும் இந்தியாவின் சுதந்திரம்பற்றி, சமாதான மகாநாட்டில் வற்புறுத்தாமலிரா. யாவும் நேச தேச வெற்றியையே பொறுத்துள்ளன.

## புத்தகசாலைகளுக்கு உதவி

### ரூ. 55,000 செலவழிக்கச் சர்க்கார் முடிவு

ஜில்லா போர்டுகள், முனிசிபல் சபைகள், பஞ்சாயத்துகள் ஆகியவற்றால் நடத்தப்படும் புத்தக சாலைகளுக்கு 1943-44-ம் வருஷத்தில் ரூ. 55,000 வரை உதவுவதென்று சர்க்கார் தீர்மானித்திருக்கின்றனர். இதில் முனிசிபல் சபைகள், ஜில்லா போர்டுகள் ஆகியவற்றால் நடத்தப்படும் புத்தகசாலைகளுக்கு ரூ. 25,000 மும் பஞ்சாயத்துகளால் நடத்தப்படும் புத்தக சாலைகளுக்கு ரூ. 30,000 மும் செலவழிக்கப்படும். தனிப்பட்ட ஸ்தாபனங்களால் நிர்வகிக்கப்படும் புத்தக சாலைகளுக்கும் உதவ ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்த ஸ்தாபனங்கள் சம்பந்தப்பட்ட ஸ்தல ஸ்தாபனங்களுக்கு மனுச் செய்து கொள்ளவேண்டும்.

## சென்னைக் கவர்னர் ஆக்டிங் வைஸ்ராய்?

தற்போதுள்ள வைஸ்ராய் மீண்டும் தமது உத்தியோகப் பதவி நீடிப்பதை விரும்பமாட்டார் என்று டில்லியில் பேசிக் கொள்ளப்படுகிறது. பிரிட்டிஷ் பத்திரிகைகளும் லார்டு லின்லித்கோவுக்குப் பிறகு வைஸ்ராய் பதவிக்கு வரக்கூடியவர்களைப் பற்றிப் பலமாகப் பிரஸ்தாபிக்க ஆரம்பித்திருக்கின்றன.

நேசநாடுகள் பஸிபிக் போர்முனையில் ஜப்பானுக்கு எதிராக அனுஷ்டிக்க வேண்டிய கொள்கையை நிர்ணயிக்கும் போது இந்திய விஷயத்தை அவசியம் கவனித்தாக வேண்டும். இந்தியாவில் 7-வருஷ காலம் நல்ல அநுபவம் அடைந்த லார்டு லின்லித்தோ லண்டனில் இந்திய விஷயமாக ஆலோசனை நடக்கும் சமயத்தில் அங்கு இருப்பது விசேஷமெனக் கருதப்படுகிறது. ஆகவே, அக்டோபர் மாதத்துக்கு முன்னதாகவே லார்டு லின்லித்கோ இந்தியாவிலிருந்து புறப்பட்டு விடுவார் என்று கிளப்பதற்கும் இடமிருக்கிறது. அக்டோபர் மாதத்தில்தான் அவரது உத்தியோக காலம் முறைப்படி முடிகிறது.

### இடைக்கால ஏற்பாடு

லார்டு லின்லித்கோ லண்டனுக்கு அழைக்கப்பட்டால், நிரந்தரமாக அவருக்குப் பதில் ஒரு வைஸ்ராய் இங்கு வரும் வரை சீனியர் கவர்னரான சென்னைக் கவர்னர் ஸர் ஆர்தர் ஹோப் ஆக்டிங் வைஸ்ராயாக இருப்பார் எனத் தெரிகிறது.





## இந்திய சட்ட சபை இடைத் தேர்தல்

இந்திய சட்டசபையில் ஏற்பட்ட காலி ஸ்தானத்துக்கு பலர் போட்டியிட்டதில் திருவாளர்கள் கத்தே ரெங்கைய நாயுடு சுந்தரராவ் நாயுடு ஆகிய இருவர் நீங்கலாக மற்றவர்கள் தங்கள் நியமனச் சீட்டுகளை வாபஸ் பெற்றார்கள். ஆகவே கத்தே ரெங்கைய நாயுடு, டி. சுந்தரராவ் நாயுடு ஆகிய இருவர் மட்டும் போட்டியிடுகிறார்கள். தேர்தல் ஜூன் 5உ நடைபெறும்.

## விடுதலையானவுடன் மீண்டும் கைது

தேவகோட்டை திரு. டி. ஆர். அருணாசலம் மீது போலீஸ்கான்ஸ்டபிள்களைத் தாக்கியதாகக் கொண்டுவரப்பட்ட வழக்கில் ஷெயார் மே 3உ விடுதலைசெய்யப்பெற்றார். ஆனால் மீண்டும் பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்யப்பட்டார்.

## காங்கிரஸ் ஊழியர்கள் விடுதலை

திரு உன்னிகிருஷ்ணன், ராம. கருப்பஞ் செட்டியார் ஆகிய காங்கிரஸ் ஊழியர்கள் பாதுகாப்புச் சட்டப்படி தண்டிக்கப்பட்டு தண்டனை காலம் முடிந்ததும் அலிபுரம் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டிருக்கிறார்கள்.

## போலீஸ் கான்ஸ்டபிள்களைத் தாக்கியதாக

சேதுராமன் சேர்வை மற்றும் 24 பேர்கள் மீது சென்ற ஆகஸ்ட் 17உ தேவகோட்டை ஆர்ச் ரோட்டில் சட்ட விரோதமாகக் கூடி தங்கள் கடமைகளைச் செய்து கொண்டிருந்த இரு கான்ஸ்டபிள்களைத் தாக்கியதாகவும், ஒரு கான்ஸ்டபிளை ராஜினாமாச் செய்யும்படியும் வற்புறுத்தியதாகவும் கொண்டு வரப்பட்ட வழக்கில் ஏற்கனவே விடுதலை செய்யப்பட்ட ஐவர் நீங்கலாக 20 பேர்களில் தேவகோட்டை சப் டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட் தமது திருப்பத்தூர் முகாமில் சிவசாமி, டி. ஆர். அருணாசலம், டி. வி. அரு. திருப்பதி செட்டியார், ஷண்முக வேலாயுதம் ஆகிய நால்வரையும் விடுதலை செய்தார். சேதுராமன் சேர்வை, ராம. அண்ணாமலை செட்டியார், திருநாவுக்கரசு செட்டியார் மற்றும் 13 பேர்களும் 3 வருஷம் வரை பலவிதமான கடுங்காவல் தண்டனை விதிக்கப்பெற்றார்கள்.

## யெங்பாய்ஸ் கிளப், புதுவயல்

புதுவயல் அரு. உ. வீர. கட்டிடத்தில் 7-5-43 காலை 9 மணிக்கு புதுவயல் திரு. வீர. தேனப்ப செட்டியார் தலைமையில் கிளப் திறப்பு விழா நடைபெற்றது.

## காங்கிரஸ் — லீக் ஒப்பந்தம்

### ஸர் ராமசாமி முதலியார் ஆவல்

ஜூன் மாத முதலில் லண்டனிலிருக்கும் ஸர் ஏ. ராமசாமி முதலியார் இந்தியாவுக்குப் புறப்படுவார் எனத் தெரிகிறது. அவர் இந்தியா வந்து சேர்ந்ததும் காங்கிரஸ் தலைவர்களைப்பற்றிய பிரச்னை விவாதிக்கப்படும். காங்கிரஸ் தலைவர்கள் விடுதலையடைந்தவுடன் ஜனாப் ஜின்னாவுடன் ஒப்பந்தத்திற்கு அவசியம் வரவேண்டும் என்று அவர் ஆவலாக இருக்கிறார்.

## ஏமாற்றி சர்க்கரை லைசன்ஸ் வாங்கியதாக

### மூன்று மாதக் கடுங்காவல்

தான் அரிமளத்தில்ஒருவியாபாரி என்று பொய்யாகச்சொல்லி சர்க்காரிடம் இரண்டு மூட்டை சர்க்கரைக்கு ஆர்டர் வாங்கியதாக சிங்கமுத்து என்பவர் பேரில் கொண்டுவரப்பட்ட வழக்கில் புதுக்கோட்டை அடிஷனல் மாஜிஸ்திரேட் அன்னாருக்கு 3 மாதக் கடுங்காவலும் ரூ 20 அபராதமும் கட்டத் தவறினால் மேற்கொண்டு ஒரு மாதம் காவலும் விதித்தார்.

## ரஷ்ய நிவாரண நிதிக்கு ஒரு லட்ச ரூபாய்

### இந்தியாவின் நன்கொடை

ரஷ்யாவுக்கு வைத்திய சாமான்கள் அனுப்புவதற்காக ஸ்ரீமதி சர்ச்சில் லண்டனில் திரட்டி வரும் ரஷ்ய நிவாரண நிதிக்கு மேலும் ஒரு லட்ச ரூபாய் மே. த. வைஸ்ராயின் யுத்த நிதியிலிருந்து நன்கொடையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

இதற்கு முன் இந்தியாவிலிருந்து இந்த நிதிக்காக அனுப்பப்பட்ட நன்கொடைகளையெல்லாம் ஏற்றுக்கொண்டு ஸ்ரீமதி சர்ச்சில் மே. த. வைஸ்ராய்க்கு எழுதியிருக்கும் கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:-

"ரஷ்யாவின் நிவாரணத்திற்காக உங்களுடைய நிதியும், இந்தியாவிலுள்ள மற்ற தர்ம ஸ்தாபனங்களும் அளித்துள்ள மகத்தான உதவியை நம்முடைய வீர நேச நாட்டிடம் உள்ள அநுதாபத்துக்கு ஓர் அறிகுறியென்றே நான் கருதுகிறேன்.

இந்த லட்ச ரூபாய் நன்கொடையை அனுப்பும்பொழுது மே. த. வைஸ்ராய் ஸ்ரீமதி சர்ச்சிலுக்கு அனுப்பிய தந்தியில் ரஷ்யா தன்னுடைய தாய் நாட்டையும் தன்னுடைய லட்சியங்களையும் காப்பாற்றுவதற்காக மன உறுதியுடன் நின்று போராடி வருவதை இந்தியா மிகுந்த பாராட்டுதலுடன் கவனித்து வருகிறது" என்று குறிப்பிட்டிருந்தார்.

## பெட்ரோல் வேண்டாத மோட்டார்கள் 10,000

### புது மாறுதலில் சென்னைக்கு முதல் ஸ்தானம்

இந்தியா பூராவிலும், 6,776 பஸ்களும், 2,210 லாரிகளும் கரிவாயுவால் ஓடுவதற்காக மாற்றி யமைக்கப்பட்டிருக்கின்றன என்று சமீபத்தில் கிடைத்த புள்ளி விவரங்களிலிருந்து தெரிகிறது. இந்த எண்ணிக்கையுடன் கரிவாயுவுக்கு மாற்றப்பட்ட சவாரி மோட்டார்களையும் மற்ற வண்டிகளையும் சேர்த்தால் மொத்தம் 10,343 ஆகிறது.

மேலே குறிப்பிட்ட அளவு பஸ்களும் லாரிகளும் மாற்றி யமைக்கப்பட்டிருப்பதன் மூலம் வருஷத்துக்கு ஒரு கோடியே 60 லட்சம் காலன் பெட்ரோல் மிச்சப்படுவது சாத்தியமாகியிருக்கிறது. இன்னமும் ஏராளமான வண்டிகள் கரிவாயுவுக்கு மாற்றப்பட்டு, இந்த யுத்தத்துக்கு மிகவும் அவசியமாயிருக்கும் பெட்ரோல் கோடிக் கணக்கான காலன்கள் மீதப்படுத்துவது சாத்தியம். அதற்கு இன்னும் அதிக முயற்சி தேவை. மோட்டார்களைக் கரிவாயுவில் ஓடும்படி மாற்றியமைப்பது ஒவ்வொரு தேசாபிமானியின் கடமை என்றே சொல்லலாம்; மேலும் பெட்ரோல் படியளப்பு இருந்துவரும் இந்தக் காலத்தில் நம் கார்களை நன்கு உபயோகிப்பதற்கும் இது உதவுகிறது.

இந்த வேலையில் சென்னை ராஜதானி தான் முதல் இடம் பெற்றிருக்கிறது. இதுவரை சுமார் 3,707 வண்டிகள் இங்கு மாற்றியமைக்கப்பட்டிருக்கின்றன. அடுத்த படியாக பம்பாயில் 1,359, மத்திய மாகாணத்தில் 882, வங்காளத்தில் 833, பஞ்சாப்பில் 507. இந்திய சமஸ்தானங்களிலே மைசூர் தான் முன்னிற்கிறது. 474 வண்டிகள் அங்கு மாற்றியமைக்கப்பட்டிருக்கின்றன. மிகச் சிறியதான புதுக்கோட்டை சமஸ்தானத்திலே கூட 93 வண்டிகள் மாற்றியமைக்கப்பட்டிருக்கின்றன.

(சமது நிருபர்)

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்டமொன்று 'காந்தி மாளிகை'யில் சேர்மென் திரு. சி. முரு. நாராயணன் செட்டியார் தலைமையில் 8-5-43 சனிக்கிழமை மாலை 4 மணிக்குக் கூடியது. தலைவருட்பட 10 அங்கத்தினர்கள் வந்திருந்தார்கள்.

காலம் கடந்து வந்ததும் தள்ளுபடி செய்யவேண்டியதுமான தொழில் வரி அப்பீல்கள் யோசிக்கப்பெற்றன. மூன்று அயிட்டங்கள் தவிர பாக்கி அப்பீல்கள் தள்ளுபடி செய்யப்பட்டன. அந்த மூன்று அப்பீல்களும் உரிய காலத்துக்கு முன் அனுப்பப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

பிரிட்டிஷ் சாம்ராஜ்ய குஷ்டரோக நிவாரண சங்கத்தின் இராமனுதபுரம் ஜில்லாக் கிளை ஸ்தாபனத்துக்கு நன்கொடை கேட்டுவரலான ஜில்லா சுகாதார அதிகாரியின் லெட்டர் யோசிக்கப்பெற்று தேவையில்லை என முடிவு செய்யப்பெற்றது.

முனிசிபல் பள்ளிக்கூடங்கள் இருக்கும் இடங்களை முனிசிபாலிட்டியில் அக்வயர் செய்து அந்த இடங்களில் பக்காக் கட்டிடங்கள் கட்டியும் பள்ளிக்கூடம் இல்லாத வார்டுகளில் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்த வேண்டுமென்ற திரு. வெ. சுப. சுப்பையா அம்பலத்தின் தீர்மானம் ஏக மனதாக நிறைவேறியது.

கல்லுக்கட்டி கீழ்கரையில் உள்ள வாசகசாலை ரொம்ப காளாய் தண்ணீர் பந்தல் நடந்து வந்ததற்கு இடையூறாக இருப்பதால் வாசகசாலையை எடுத்துவிட வேண்டுமென்ற தீர்மானம் திரு. வெ. சுப. சுப்பையா அம்பலத்தால் பிரரேபிக்கப்பட்டது. ஆனல் அந்த வாசகசாலையின் நன்கொடையாளர் திரு. ராமனுதன் செட்டியாரைக் கலக்காமல் டை வாசகசாலையை வேறிடத்துக்கு மாற்றவோ அல்லது எடுத்துவிடுவதோ கூடாதென பெரும்பாலான அபிப்பிராயமிருந்தால் அடுத்த கூட்டத்துக்கு ஒத்திவைக்கப்பட்டது.

கரி சப்ளை செய்ய வந்துள்ள டெண்டர்கள் விஷயம் யோசிக்கப்பட்டன. இதில் பலத்த வாதங்களும் ஏற்பட்டன. முதல்தரம் கூப்பிடப்பட்டதில் ஒரு டெண்டர்தான் வந்ததென்றும் அதுவும் டெண்டர் பெற்றுக்கொள்ளப் படவேண்டிய காலத்துக்கு மூன்று நாள் கழித்து கமிஷனரால் பெற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறதென்றும் நிர்வாக அதிகாரி காலங்கடந்து டெண்டரைப் பெற்றுக்கொள்ளலாமா வென்றும் வாதிக்கப்பட்டது. முடிவில் ஒருவித முடிவிற்கும் வாராமல் தள்ளிவைக்கப்பட்டது.

காரைக்குடி நகர சபை

## கவுன்ஸிலர் திரு. கிருஷ்ணய்யருக்கு தொத்து நோயா?

### இல்லையென்கிறார் சுகாதார அதிகாரி

கவுன்சிலர் திரு. வெ. சுப. சுப்பையா அம்பலத்தின் கேள்விகளும் அவற்றிற்குப் பதிலும்:—

கேள்வி:- நமது முனிஸிபல் கவுன்ஸிலர் (உபதலைவர்) திரு. கிருஷ்ணய்யருக்கு தொத்துவியாதி ஏற்பட்டிருந்தும் அவரை கவுன்ஸிலுக்கு வாராமல் தடுக்காததின் காரணமென்ன?

பதில்:—இன்ன ,நோய் என்று நிச்சயித்து தகுந்த டாக்டரின் ரிப்போர்ட்டிருந்தாலொழிய நடபடி எடுப்பதற்கில்லை. தொத்து நோயாயிருந்தால் சுகாதார அதிகாரி கவனித்திருப்பார். சுகாதார அதிகாரி கவனித்தாரா? என்று ஒரு உபகேள்வி கேட்கப்பட்டபொழுது சுகாதார இலாக்காவால் எது தொத்து நோய் என்று கருதப்படுகிறதோ அந்த நோய் பிரஸ்தாப கவுன்ஸிலருக்கு இல்லை யென்றும் காலரா, வைசூரி, பிளேக் முதலியவைகள் தான் தொத்து நோயாகக் கருதப்படுகிறதென்றும் பதிலளிக்கப்பட்டது.

கேள்வி:—நமது முனிஸிபாலிட்டி மாலை 5 மணிக்கு மேல் நடைபெறக் கூடாதென்று கவுன்ஸில் தீர்மானம் இருந்தும் அமுலுக்கு கொண்டுவாராததின் காரணமென்ன?

பதில்:—தீர்மானம் சாத்தியமான வரை அமுலிலிருந்து வருகிறது.

கேள்வி:—நமது முனிஸிபாலிட்டிக்கு புதிதாக வந்த நிர்வாக அதிகாரி திரு. முத்துராமலிங்கம் அவர்கள் வந்த மறுதினமே முனிஸிபல் கவுன்ஸிலர்களைக் கூடப் பார்க்காமல் இவ்வூரில் பிரபலஸ்தர்கள் என்று அவர் எண்ணிக் கொண்டு ஒவ்வொரு வீடு விடாகப் போய் ஒவ்வொருவரையும் பார்த்ததின் காரணமென்ன?

பதில்:—கேள்விக்கு இடமில்லை.

கவுன்ஸிலர் திரு கு. பெரி. நாராயணன் அம்பலத்தால் கேட்கப்பட்ட கேள்விகளும் பதிலும்:—

கேள்வி:—நமது முனிஸிபல் எல்லைக்குள் கட்டப்பட்டிருக்கும் கக்கூசுகள் வெகுகாலமாக உபயோகத்திலிருந்தும் அவைகளில் ஆண் பெண் போகும் வழி குறிப்பிடாமல் இருப்பதற்குக் காரணமென்ன?

பதில்.—சில கக்கூசுகளில் சுவர்களில் ஆண் பெண் படம் போட்டும் எழுதியும் இருக்கின்றன. இல்லாதவற்றிற்கு அவ்விதம் போட ஏற்பாடு செய்யப்படும்.

கேள்வி:—டை கக்கூஸ்களில் தண்ணீர் தொட்டிகள் கட்டியும் அனவகளில் தண்ணீரும் குவளையும் சப்ளை செய்யாமலிருப்பதும் அவ்வப்போது சுத்தம் செய்ய சிப்பந்தி இல்லாமலிருப்பதும் ஏன்?

பதில்:-வசதிக் குறைவினுல் தண்ணீரும் குவளையும் சப்ளை செய்ய இயலவில்லை. அவ்வப்போது சுத்தம் செய்ய சிப்பந்திகள் நியமிக்கப் பெற்று சுத்தம் செய்யப்பட்டு வருகின்றன. இன்னும் மேற்கொண்டு சிப்பந்திகளை நியமிக்க ஏற்பாடு செய்யப்படும்.

கேள்வி:—கல்லுக்கட்டி தென்மேற்கு மூலையிலுள்ள யூரினலுக்கு மறைவு இல்லாமலும் மலம் ஜலம் கழிக்கும் நிலைமையிலும் இருப்பதால் மறைவு கட்டி சுத்தம் செய்யாமலிருப்பதற்கும் காரணம் என்ன?

பதில்:-மறைவு ஏற்படுத்தினுல் யூரினலில் மலம் கழிக்க ஏதுவாகும். ஆகவே மறைவு ஏற்படுத்தவில்லை. அவசியமாயின் மறைவு ஏற்படுத்தப்படும்.

பிறகு பல மாமூலான விஷயங்கள் முடிவு செய்யப் பெற்று 6 மணிக்கு கூட்டம் முடிந்தது.

---

## காரைக்குடி வர்த்தக குமாஸ்தாக்கள் சங்கம்

இந்நகர் ஸ்ரீ ந. சுப்பிரமணிய பிள்ளை தலைமையின் கீழ் வர்த்தக ஸ்தாபனங்களில் உத்தியோகம் பார்ப்பவர்களின் கூட்டம் ஒன்று 4-5-43ல் கூடி காரைக்குடி வர்த்தக குமாஸ்தாக்கள் சங்கம் நிறுவப்பட்டது. ஸ்ரீ ந. சுப்பிரமணிய பிள்ளை தலைவராகவும் ஸ்ரீ. கு. பெரி. நாராயணன் உபதலைவராகவும், திரு. ராம. லெக்ஷ்மண நாயுடு காரியதரிசியாகவும், ஜனுப் V. முகம்மது இஸ்மாயில் உபகாரியதரிசியாகவும், ஸ்ரீ பெ. சி. காளியப்ப நாடார் பொக்கிஷதாராகவும் சுபானு வருஷத்திற்கு உத்தியோகஸ்தர்களாக தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.



Edited Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi. (S. INDIA)

